[25th September 1961

SRI A. GOVINDASAMY : இந்த பக்கிங்ஹாம் கால்வாயில் விசைப் படகு ஓட்ட வசதி செய்யப்படுமா ? அல்லது சாதாரணப் படகு ஓட்ட வசதி செய்யப்படுமா ?

THE HON. SRI P. KAKKAN : அதைப் பின்னுலே பார்த்துத்தான் சொல்ல முடியும். முதலில் திட்டம் உருவாகட்டும்.

SRI K. VINAYAKAM : இப்போது கார்கோ படகுதான் அதாவது உப்பு மூட்டை, சவுக்குக் கட்டை முதலியவை ஏற்றிச் செல்வதற்கு அந்தக் கால்வாய் பயன்படுத்தப்படுகிறது. ஆயினும் சென்னைக்குள்ளே இருக்கிற அந்தக் கால்வாய் மூலமாக பிரயாணிகளை ஏற்றி செல்வதற்கு ஏதாவது திட்டம் இருக்கிறதா ? அதனுல் நகரிலுள்ள பிரியாண நெருக்கடி குறையாதா மத்திய அரசாங்கம் இதற்கு அனுமதி அளிக்காவிட்டாலும் சென்னை அரசாங்க நிதி பட்ஜெட்டிலேயே சேர்த்து இத் திட்டத்தை பூர்த்தி செய்ய யோசிக்கப்படுமா ?

THE HON. SRI P. KAKKAN : கார்கோ மட்டும் போவதற்கல்ல. போட்டு போவதற்கும் யோசிக்கப்படுகிறது. கனம் அங்கத்தினர் சொல்கிற மாதிரியும் ஆலோசிக்கப்படும்.

11-30 a.m. SRI T. P. ELUMALAI : பிரயாணிகளுக்கு வசதி செய்து கொடுத்தால் இப்பொழுது போய்க்கொண்டிருக்கும் படகுத் தொழிலாளர்களுக்கு எந்த விதமான பாதகமும் இல்லாமல் சர்க்கார் பார்த்துக் கொள்ளுமா ?

THE HON. SRI P. KAKKAN : மற்றவர்களுக்கு இடையூறு இல்லாத படி கார்கோ போக ஏற்பாடு செய்யப்படும்.

SRI N. K. PALANISAMI : போட்டு போக்குவரத்திற்கு அனுகூல மான முறையில் அதை சரி செய்ய வேண்டுமென்று சொன்னுர்கள். இப்பொழுது இருக்கக்கூடிய கனுலை எடுத்துக்கொண்டால் வருடத்திற்கு மூன்று மாதங்கள் தான் தண்ணீர் இருக்கிறது. பாக்கியுள்ள மாதங் களில் தண்ணீர் கிடையாது. தண்ணீர் இல்லாமல் போட் எப்படி போகும் ?

THE HON. SRI P. KAKKAN : அதில் வருடம் பூராவும் தண்ணீர் இருப்பதற்கு திட்டத்தில் ஏற்பாடு இருக்கும்.

*Ports—Tuticorin—Development of*

DEPUTY SPEAKER : Questions 1806 and 1820-C may be taken up together.

* 1806 Q.—SRI N. K. PALANISAMI (on behalf of SRI M. KALYANASUNDARAM) : Will the Hon. the Minister for Works be pleased to state—

(a) whether the Government of India, Communication Department have recommended to the Planning Commission the inclusion in the Third Five-Year Plan of the scheme of developing Tuticorin into a major port; and

(b) if so, the details thereof ?

THE HON. SRI P. KAKKAN : (a) Yes, Sir.

(b) The Government of India have stated that the scheme has been included in the Third Five-Year Plan and a provision of Rs. 10 crores has been made for the new major ports at Tuticorin and Mangalore.

25th September 1961]

*Ports (Tuticorin)*

*1820-C *Q*.—Sri N. K. PALANISAMI: Will the Hon. the Minister for Works be pleased to state—

(*a*) whether there is any proposal to convert Tuticorin port as all weather port; and

(*b*) if so, the details thereof ?

The Hon. Sri P. KAKKAN: (*a*) Yes, Sir.

(*b*) The Government of India have stated that the scheme has been included in the Third Five-Year Plan and a provision of Rs. 10 crores has been made for the new major ports at Tuticorin and Mangalore.

Sri N. K. PALANISAMI: எல்லாப் பருவ காலங்களிலும் உபயோகிக்கும் முறையில் என்னென்ன அபிவிருத்திகள் செய்யப்படும் ?

The Hon. Sri P. KAKKAN: ஒரு மேஜர் போர்ட்டாக வருவதற்கு என்னென்ன அபிவிருத்திகள் செய்யவேண்டுமோ அவை அத்தனையும் செய்யப்படும். தனிக் கேள்வி போட்டால் விவரமாக சொல்கிறேன்.

Sri K. ANBAZHAGAN: சேது கால்வாய்த் திட்டம், தூத்துக்குடித் திட்டம் இரண்டையும் இணைத்து நிறைவேற்ற வேண்டுமென்ற கருத்து ஏற்கனவே இந்த அரசாங்கத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது. ஆகவே அந்த கால்வாய்த் திட்டம் இதோடு சேர்த்து இணைத்து நிறைவேற்ற ஏதாவது வழிவகை செய்யப்பட்டிருக்கிறதா ?

The Hon Sri P. KAKKAN: இந்தக் கால்வாய்த் திட்டம் தூத்துக்குடி திட்டத்தோடு இப்பொழுது சேர்க்கப்படவில்லை. தனியாக எடுக்க ஏற்பாடு செய்யப்படும்.

Sri M. S. SELVARAJAN: What are the Preliminary works carried on so far for starting the Harbour work during the Plan period, Sir ?

The Hon. Sri P. KAKKAN: We are asking the Government of India to start the work in time. On the 22nd instant, I attended the National Harbour Board meeting. The Union Minister for Transport and Communications, in his inaugural address in that meeting stated that the work will be taken up in time. So, we can fulfil our promise in that area regarding this work.

Sri K. ANBAZHAGAN: தூத்துக்குடித் துறைமுகத்தை பெரிய ஆழ்கடல் துறைமுகமாக கட்டுவதற்கு மொத்தம் எவ்வளவு செலவாகுமென்று தீர்மானித்திருக்கிறார்கள் ? இப்பொழுது ஒதுக்கியிருக்கிற 10 கோடியில் மங்களூருக்கு எவ்வளவு, தூத்துக்குடிக்கு எவ்வளவு என்று பிரித்திருக்கிறார்கள் ? எவ்வளவு தொகை ?

The Hon. Sri P. KAKKAN: 10.27 கோடி என்று நினைக்கிறேன். தூத்துக்குடிக்கு 5, மங்களூருக்கு 5.

Sri M. S. SELVARAJAN: தூத்துக்குடி துறைமுகத்தை பெரிய மீன்பிடி துறைமுகமாக விருத்தி செய்ய வேண்டுமென்ற திட்டம் இருப்பதாக அறிகிறேன். அப்படியானால், ஆல் வெதர் போர்ட்டாக டெவலப் செய்ய இருக்கிறபோது ஆழ்கடல் மீன்பிடி துறைமுகமாகவும், சேர்த்து எப்படி செய்வது என்பது இதுவரையில் பரிசீலனைக்கு வந்திருக்கிறதா ? அப்படியானால் இரண்டையும் சேர்த்து குறைந்த செலவில் கட்டலாமே என்ற ஆர்வத்தோடு தான் சொல்கிறேன்.